# திருச்சிற்றம்பலம்



சுவாமி பிரபஞ்சநாதன்

# திருச்சிற்றம்பலம்

நான் ஒரு மலைப்பகுதியில் மிகவும் ரம்மியமான சூழ்நிலையில் அமர்ந்திருக்கிறேன். அது ஒரு மாலை நேரம் என்பதினால், என்னைச் சுற்றிலும் ஏராளமான மரங்கள், மலைப் பகுதிகள், பள்ளத்தாக்குகள் என இயற்கை எழில் கொஞ்சும் அழகான காட்சிகளின் நடுவே, மெல்லிய தென்றல் காற்று என்னை வருடிக் கொண்டு செல்கிறது. அந்த காற்று வீசிக் கொண்டு இருப்பதினால், அதில் அடித்து வரப்பட்ட மேகக் கூட்டங்கள் மலைகளின் மீது மோதியபடி மிதந்து செல்கின்றன. வானம் மேக மூட்டத்துடன் விரிந்திருக்கிறது. அந்த நேரத்தில் அங்கு பறவைகளின் கூவல்கள் மெல்லியதாக என் காதில் கேட்டுக் கொண்டிருக்கிறது.



நான் அந்த இடத்தில் இருப்பதினால்தான், என்னால் அவற்றை எல்லாம் பார்க்க முடிவதினால்தான் அந்த அனுபவம் எனக்கு நிகழ்கின்றது.

நான் புலன்களின் வழியாக எல்லாவற்றையும் அறிகிறேன். மனதின் வழியாகப் பல பொருள்களை அடையாளம் கண்டு கொள்கிறேன். ஆம்! எனக்கு ஏற்றி வைக்கப்பட்ட அறிவின் அடிப்படையில், அவைகளை இன்னது என்று என்னால் கண்டு கொள்ள முடிகின்றது.

ஆனால், என் அனுபவத்திற்கு வராத சில விசயங்களாக ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களின் அடிப்படையில் **கடவுள், பிரபஞ்சம், உயிர்கள்** என்பதை எல்லாம், அவ்வளவு எளிதாக என்னால் அறிந்துக் கொள்ள முடியாமல், அனைத்து மத குருமார்களையும், சமய சான்றோர்களையும் தேடி அலைகிறேன்.

அதற்குக்காரணம், நான் இதுவரை அறிந்துக் கொண்டவைகளுடன், அவைகளை ஒப்பிட்டு அடையாளம் காணப்பார்க்கிறேன். ஆனால், அது என்னுடைய புறக்கரணங்களாகிய **கண், காது, மூக்கு, நாக்கு, தோல்** என்ற ஐம்புலன்களுக்கும் அப்பாற்பட்டு இருப்பதினால், புலன்களின் வழியாகப் புரிந்துக் கொள்ள முடியாமல் முழிக்கிறேன்.

சரி! அப்படியே என்னுடைய அகக்கரணங்களாகிய **மனம், புத்தி, சித்தம், அஹங்காரம்** என்ற அந்தக்கரணங்களின் வாயிலாக அறிய முயற்சித்தும், அவைகளைப் பற்றி அறிய முடியாமல் அவதிப்படுகிறேன்.

அத்தகைய ஆழ்ந்த யோசனையில் இருந்த என்னை எதுவோ ஒன்று கடித்த வலி வந்த உடனேயே, அந்த வலியைப் பொருக்க முடியாமல், நான் இருந்த ஆழ்ந்த சிந்தனைகளில் இருந்து, சற்றே விழித்துக் கொண்டு என்னுடைய இருப்பை நான் கவனித்ததில், நான் இருப்பது ஒரு மலைச்சாரல், அந்த மலையின் மீது வசிக்கும் ஒரு வண்டு என்னை கடித்துவிட்டு சென்றுள்ளதை உணர்ந்து கொண்டேன்.

அப்பொழுதுதான் என் கவனம் அந்த வலியை உணர்ந்து, அதன் மீது திரும்பியதினால், அந்த வலியை உணர்ந்தது எது? என் உடலா? அல்லது என் மனமா? என்று சற்றே சந்தேகத்துடன் என்னை நான் கவனித்தேன்.

ஆம்! ‘**நான் யார்?**’

உண்மையில் நான் இந்த உடலா? அல்லது மனமா?

யோசிக்க ஆரம்பித்தேன்!. நான் இந்த உடல் என்றால், எனக்கு ஆழ்ந்த உறக்கத்திலும் இந்த வலி எனக்கு தெரிய வேண்டுமே! ஆனால், அதை அப்பொழுது என்னால் உணர முடியவில்லையே. சரி மனம் என்றால், என்னுடைய ஆழ்ந்த உறக்கத்தில் என்னையே என்னால் அறிய முடியாமல் இருக்கிறது. ஆக, மனமற்ற நிலையில், அதாவது ஆழ்ந்த உறக்கத்தில் எனக்கு இந்த உடல், உலகம் தெரிவதில்லை.

அதுவே, கனவு நிலையில் வேறு ஒரு உலகம், வேறு சில உறவுகள் உண்டாகிறது. அதாவது, ஆழ்ந்த உறக்கத்திலோ, கனவிலோ என்னை நான் அறிய முடிவதில்லை. அதேசமயம், என்னுடைய விழிப்பு நிலையில் மட்டுமே, இந்த உடலும், உலகமும் இருப்பதை என்னால் அறிய முடிகிறது.

அப்படியானால், அந்த விழிப்பு நிலையில் அதை அறிபவன் யார்?

உண்மையில் நான் விழித்துக் கொண்டிருப்பதை அறிய வேண்டும் என்றால், எனக்கு இந்த உடலும், உலகமும் தெரிய வேண்டுமா? அப்படியானால், இந்த உடல் இருக்கிறது, உலகம் இருக்கிறது. ஆனால், விழிப்பு நிலையில் இருக்கும் பிணத்திற்கு இந்த உடலும், உலகமும் தெரிவதில்லையே?

அப்படியானால், இதுவரை அந்த பிணத்திற்குள் இருந்த ஏதோ ஒன்று மட்டுமே, இந்த விழிப்பு நிலை அனுபவத்தை அறிந்துக் கொண்டிருக்க வேண்டும். ஆக அது எது? அப்படியானால், **"நான் யார்?".**

ஆம்! ஆழ்ந்த தூக்கத்திலோ, அல்லது கனவிலோ என்னை நான் அறிய முடியாமல் இருந்தாலும், விழிப்பு நிலையில் என்னை நான் அறிவதாக இருந்தாலும், இதில், **"நான்"** என்று எதை அறிகிறேன்?

அந்த **"நான் யார்?".**

இந்த உடலா?, மனமா?, புத்தியா?, அஹங்காரமா? அல்லது ஏற்றி வைக்கப்பட்ட அறிவா?

நிச்சயமாக இல்லை! இருக்க முடியாது. ஆம்! இதில் எதுவுமே இல்லாமல், தாயின் வயிற்றிற்கு வரும் முன்பே நான் இருந்திருக்கிறேன். அப்படியானால், **"நான் யார்?".**

ஆம்!, அப்பாவின் விந்தணுவாகத்தான் நான் இருந்திருக்க வேண்டும் என்றால், அந்த விந்தணுவும் அவர் உண்ட உணவு இரசத்தினால் உண்டானது எனும் பொழுது, அதற்கு முன்னரேயே நான் இருந்திருக்க வேண்டும். அப்படியானால் **"நான் யார்?".**

ஆக, நான் உணவு இரசமா? அல்லது அரிசியா? காய்கறியா, கீரையா?, புல்லா, புழுவா?, மிருகமா? இல்லை!, இதில் எதுவுமே நான் இல்லை. இவைகள் எல்லாம் வரும் முன்பும் நான் இருந்திருக்க வேண்டும்.



அப்படியானால் **"நான் யார்?".**

என்னை எனக்கு யார் காட்டிக் கொடுப்பார்கள்?

என்ன? என்னை எனக்கு இன்னொருவர் காட்டிக் கொடுக்க வேண்டுமா?

தேவையில்லையே, நான்தான் இங்கு இருக்கிறேனே! பிறகு யார் என்னை எனக்கு காட்டிக் கொடுக்க வேண்டும்.

அவர்கள் எப்படி? என்னை எனக்கு காட்டிக் கொடுப்பார்கள்? இந்த உடலாகவா? இல்லை மனமாகவா?

பிறகு?

ஆம்! அது அவர்களாலும் முடியாது. அப்படியானால், **"நான் யார்?"**.

அதாவது, விழிப்பு நிலையில் இந்த உடலுடன் சம்பந்தப்படாமல், என்னை மறந்த நிலையில், மனதில் பிடியில் பல எண்ணங்கள் எழுந்துக் கொண்டிருந்த நிலையில், இந்த உடலையும், மனதையும் தவித்த ஒன்று என்னை எனக்கு காட்டிக் கொடுத்தது.

ஆம்! அதுதான் அந்த வண்டு கடித்த உடன் உண்டான வலி உணர்வு.

அந்த வலி உணர்வு உண்டான உடனேதான் நான் என் சுயஉணர்வுக்கு திரும்பினேன். அதுதான் என்னுடைய சுயம். ஆம், அதன் பிறகுதான் இந்த உடலையும், உலகத்தையும் உணர்ந்துக் கொண்டேன். அப்படித்தான் தினம், தினம் தூக்கத்திலும், கனவிலும் இருந்து, இந்த விழிப்பு நிலை அனுபவத்திற்கு வருகிறேன்.

ஆக, இந்த உடலுக்கு சம்பந்தப்படாத நிலையிலும், என்னை என்னால் உணர முடிகிறது.

ஆகவே, **"நான்"** அந்த உணர்வாகத்தான் இருக்க வேண்டும். அப்படியானால், அந்த பேருணர்வு அனுபவம் எங்கே நடக்கின்றது?

அது நம்மை நாம் அறிந்து உணர்வதின் வாயிலாகவே, அனுபவமாகிறது.



அந்தக் கணம், அந்த அனுபவம் நிகழ்வது நம் உணர்வு வெளியில்தான்.

அந்த உணர்வுதான் '**சித்**'.

வெளிதான் '**அம்பலம்**'.

உணர்வுவெளியைத்தான் **"சிற்றம்பலம்"** என்கின்றோம்.

உணர்வுவெளியில்தான் இந்த உலகம் இருக்கின்றது.

உலகம் என்பது ஒரு இடமில்லை.

அது ஓர் அனுபவம்.

நாம் பிரபஞ்சத்தில் இருக்கின்றோம் என்று நம்புகிறோம்.

ஆனால், உண்மையில் இந்த பிரபஞ்சம்தான் நம்முள் இருக்கின்றது.

நம் உணர்வு (பேரறிவு) வெளியில்தான் இந்த உலகம் எழுகின்றது, இருக்கின்றது, அழிகின்றது.

உணர்வுவெளி (பேரறிவு) எப்போதும் இருக்கின்றது.

இந்த உணர்வு வெளியைத்தான் **"சிதாகாசம்"** (அறிவாகாசம்) என்கின்றோம்.

பெரியவர்கள் **மகாகாசம், சிதாகாசம், பிரேமாகாசம், பரமாகாசம்** என்று வகைப்படுத்தி வைத்திருக்கின்றார்கள்.

**மகாகாசம்** என்பது ஐம்பூதங்களாலான பௌதிக உலகம்.

**சிதாகாசம்** என்பது உணர்வுவெளி. அதாவது, பேரறிவின் இருப்பு.

**பிரேமாகாசம்** என்பது அன்பின் எல்லையற்ற விரிவு.

**பரமாகாசம்** என்பது அனைத்தையும் கடந்த, அனைத்தையும் தன்னுள் அடக்கிய முதலும், முடிவுமற்ற பரப்பிரம்மம்.

அடுத்து, தனி உயிரின் தளங்களாக ஐந்து கோசங்களைக் கூறுகிறார்கள்:

**அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம்.**

இந்த ஐந்து தளங்களுக்கு அப்பால், தனி உயிர் என்னும் தன்மை கடந்து, பேரண்டத்தின் தன்மைகளாக இருக்கும் தளங்கள் **சத், சித்** என இரண்டு உள்ளன.

'**சித்**' என்பது '**உணர்வு நிலை**'.

'**சத்**' என்பது '**இருப்பு**'.

ஆக மொத்தம் பஞ்ச கோஷங்களுடன் சேர்ந்து ஏழு தளங்கள்.

இதில், **அன்னமய கோசம்** என்பது ஸ்தூல உடல். அதாவது, பஞ்ச பூதங்களாலான பரு உடல்.

நாம் உட்கொள்ளும் உணவு, நம் உடலின் செல்களாகவும், திசுக்களாகவும், எலும்புகளாகவும் உருமாறுகின்றன. அந்த உருமாற்றத்திற்குக் காரணமான அந்த அகண்ட அறிவு, அந்த உடல் உறுப்புகள் செயல்படத் தேவையான சக்தியையும் அந்த உணவின் வாயிலாகத்தான் உண்டாக்கிக் கொடுக்கின்றன. ஆக, அந்த உடலை உருவாக்கும் அந்த அறிவே, அந்த உடல் செயல்படத்தேவையான சக்தியையும் அளிக்கிறது எனும் பொழுது, அதன் அதி சூக்ஷுமத்தை அறிவது என்பது சாதாரண அறிவு படைத்த சீவர்களுக்கு ஒரு நாளும் சாத்தியமாகாது.

ஆகவே, மனிதன் மட்டுமே தனக்கு கொடுக்கப்பட்ட பிரத்யேக ஆறாம் அறிவாகிய (மனம்) பகுத்தறிவின் மூலம், நன்மை, தீமைகளை அறிந்து, அந்த அகண்டத்தை அனுபவமாக்க முடியும் என்றால், அது இந்த அன்னத்தால் ஆன, மனித தேகத்தால் மட்டுமே முடியும்.

அவ்வாறே, **பிராணமய கோசம்**, நம் சுவாசிக்கும் சுவாசத்தை அடிப்படையாகக் கொண்டது. நாம் மூச்சை உள்ளிழுக்கும் போது, அந்த காற்றுடன் உயிர்ச்சக்தியும் (பிராணன்) சேர்ந்து உள்ளே போய், நம்முடைய நாடி நரம்புகளில் ஓடுகிறது. அதன் வாயிலாக நம் உடலின் உள்ளியக்கங்களை இந்தச் சக்தி ஒழுங்கு படுத்துகிறது.

**மனோமய கோசம்** என்பது, '**மனம்**' என்று நாம் அழைக்கும் எண்ணங்களால் ஆன இயக்கங்களின் தொகுப்பு. அதிலே, **நினைவு, ஞாபகப்படுத்துதல், சிந்தனை, உணர்ச்சிகள்,** என எல்லாமே கடந்த, கால அனுபவங்களின் அடிப்படையில், எதிர்காலம் குறித்த திட்டங்களை அமைத்துச் செயல்படுத்துவது எனலாம்.

**விஞ்ஞானமய கோசம்** என்பது `**உயர்மனம்**` அல்லது "**புத்தி**" என்றும் சொல்லலாம்.

இந்த புத்தி சக்தியின் வாயிலாகத்தான், வாழ்க்கையைப் பற்றிய ஆழமான கேள்விகளை எழுப்பி, நம்மைப் பற்றியும், இந்தப் பிரபஞ்சத்தைப் பற்றியுமான உண்மையை நோக்கிய ஒரு தேடலில் நம்மை வழி நடத்திச் செல்வது. அதாவது, நம் இருப்பின் நோக்கம், வாழ்வின் குறிக்கோள், இவை குறித்த தீவிரக் கவனம் என எல்லாமே, இந்த புத்தி சக்தியினால்தான் மனிதன் பிரித்தரிய முடிகிறது. அதனால், மனிதன் தன்னை அறிந்து தன்மயம் ஆக வேண்டுமானால், இந்த புத்தி சக்தியைக் கொண்டு, நன்மை, தீமைகளை பகுத்தறிய வேண்டும்.

அடுத்து, **ஆனந்தமய கோசம்** என்பது, தனியாக பிரிந்த உயிரும் (சீவனும்), அதற்கு அதாரமான பேருண்மையும் (பரமாத்மாவும்) சந்திக்கும் எல்லையில் உள்ளது.

ஒருபுறத்தில் விஞ்ஞானமய கோசமும், மறுபுறம் சிதாகாசமும் விரிந்திருக்க, அதன் சந்திப்பில் எழும் ஆனந்தம் இந்தப் பரிமாணத்தில் வெளிப்படுகின்றது.

சிதாகாசத்துடன் தொடர்பு கொண்டிருந்தாலும், இந்த ஆனந்தமய கோசம் என்பது, தனி உயிரின் எல்லைக்குள் அடங்கிய ஒன்றுதான் என்பதினால், இதையும் கடந்த ஆன்மாவை அறிவது என்பது, இந்த ஐந்து கோஷங்களுக்கும் அப்பாற்பட்ட **"விழிப்புணர்வு"** என்ற நம்முடைய உணர்வின் உன்னத இருப்பில்தான் இருக்கிறது.

அதாவது, '**சித்**' என்னும் **உணர்வு (அறிவு) வெளியில்**தான், இந்த பிரபஞ்சம் என்னும் அனுபவம் இருப்பு கொள்கிறது. அதில், நடப்பவைகள் அனைத்தும், '**வெட்ட வெளி**' என்ற நம்முடைய உணர்வு வெளியில்தான் நடக்கின்றன.

இங்குதான் '**அறிதல்**' நிகழ்கிறது.

எல்லாம் அறியும் **"அறிவு"** என்பது இதுதான்.

இதை **(சித்)** அறிவதுதான் இருப்பின் **(சத்)** நோக்கம் என்றே சொல்லலாம்.
அந்த நோக்கம் சரியாக நிறைவேறி விட்டால், அதன்பின்பு '**ஆனந்தம்**' மட்டுமே நிலைத்து நிற்கும். இதைத்தான் (சத்+சித்+ஆனந்தம்) **"சத்சிதானந்தம்"** என்கின்றோம்.

அதாவது, **"எதை அறிந்துக் கொண்டால், வேறு எதையும் அறியத் தேவையில்லையோ, அதை அறிவதே அறிவு!"** என்கின்றது சாஸ்திரம்.



இதைத்தான்,

**"**எல்லாம் அறியும் அறிவுதனைவிட்டு
எல்லாம் அறிந்தும் லாபமிங்கில்லை
எல்லாம் அறியும் அறிவை நானென்னில்
எல்லாம் அறிந்த இறையெனலாமே**"** - திருமூலர்.

இங்குதான் இறைவனின் நடனம் அந்த சக்தியுடன் (பிரபஞ்சத்தின் தோற்றம் - மாயை) சேர்ந்து நடக்கிறது.

அதனால்தான் '**சித்ரூபிணி**' என்று பிரபஞ்சத்தின் தாயாக '**இதயவெளி**' யைக் குறிக்கிறார்கள்.

பிரபஞ்சத்தின் ஆனந்தக் கூத்து நடக்கும் அரங்கம்தான் இதுதான்.

இதைத்தான் **சிதம்பரம்** என்றும் '**சிற்றம்பலம்**' என்றும் அழைக்கின்றோம்.

அடுத்து, **`சத்`** என்னும் ஆதார ஸ்தலமே **`இருப்பு`** (existence) எனப்படுகின்றது.

எது இருந்தாலும், இல்லாவிடாலும், அதாவது, வந்தாலும், போனாலும் என்றும், எப்போதும் இருப்பது, இந்த **"இருப்பு"** (சத்) மட்டுமே ஆகும்.

இதுவே, '**பிரம்மம்**'. இதுதான் **பரம்பொருள்**. இதைத்தான் "**இறைவன்**" என்கிறோம். அதுவே, '**வெட்டவெளி**' என்றும் அழைக்கப்படுகிறது.

அறிவதற்கு ஏதும் இல்லாமல் போகும் போது, அனைத்தையும் அறியும் `**சித்**` **(அறிவு)** என்னும் சுத்தப் பிரக்ஞையும் `**சத்**` **(இருப்பு)** என்னும் ஆதாரத்தில்தான் நிற்கின்றது. **அந்த ஆதாரம்தான் வெட்டவெளி.**

அந்த ஆதார ஸ்தலத்தைத்தான் நம்முடைய புரிதலுக்காக இந்த பூ உலகில் **சிதம்பரம், சிற்றம்பலம், சிற்சபை, திருவரங்கம்** என்று பலவாறாக கூறுகிறோம்.



இதைத்தான் நம் அனுபவம் நிகழும் **காலமற்ற பெருவெளி** என்கின்றோம்.

**அனுபவிப்பவன், அனுபவம், அனுபவித்தல்** என்னும் "**திரிபுடி**" (மூன்று) நிலைகளைக் கடந்த **அகண்டாகாரம்** அது.

**நான் துய்ப்பவன் இல்லை**
**துய்க்கப்படும் பொருள் இல்லை**
**துய்ப்பும் அல்ல.**

**நான் விழிப்பு**
**நான் உணர்வின் பேரின்ப உருவம்**
**நானே சிவம், நானே சிவம்!**

என்று தன் ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றி ஆதிசங்கரரும் தமது நிர்வாண சடகத்தில் மிக அழகாக கூறுகிறார்.

இந்த உடலையே உண்மையெனக் கருதிக்கொண்டு, தன் பிற பரிமாணங்களைப் பற்றிய அறிதலில்லாமல், அறியாமையில் சிக்கிக் கொண்ட மனதின் தேவையற்ற அனுபவச் சேற்றில் சிக்கி, துன்பமே வாழ்க்கையென வாழும் சீவர்களாகிய நம்மை விழிப்புக்கு அழைத்துச் செல்வது எது தெரியுமா?...

'**சித்**' **(அறிவு)** என்னும் '**திரு**' **(இறைவன்)** நடனமாடும் "**உணர்வுவெளி**"தான்.

இந்த உணர்வு வெளியில்தான் (சிற்றம்பலத்தில்) இந்த அரங்கத்தில்தான், இந்தச் சபையில்தான் நாம் விழித்துக்கொள்ள வேண்டும்.

ஆம்! அதுவே "**நான்**".

அந்த நானே **சிவம்.** நான் இருப்பதினால்தான் இந்த உலகம் எனக்கு முன்பாகப் பிரகாசிக்கின்றது. நான் இருப்பதினால்தான் இந்த **சூரிய, சந்திரர்கள், நட்சத்திரங்கள்** என அனைத்தும் பிரகாசிக்கின்றன.

**ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம்**
**நேமா வித்யுதோ பாந்தி குதோயமக்னி |**
**தமேவ பாந்தமனுபாதி ஸர்வம்**
**தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ||**

- கடோபநிஷதம்

அங்கே சூரியன் ஒளிர்வதில்லை, சந்திரனும் நட்சத்திரங்களும் ஒளிர்வதில்லை, மின்னல் கூட ஒளிர்வதில்லை. அப்படி இருக்க, இந்த அக்கினி மட்டும் (தீபாராதனை - தீப ஒளி) எப்படி ஒளிர முடியும்? ஒளிர்கின்ற என்னை (உணர்வை) அனுசரித்தே எல்லாம் ஒளிர்கின்றன. அனைத்தும் என் **உணர்வுப் பிரகாசத்தால்** ஒளிர்கின்றன என்கின்றது கடோபநிஷதம்.

பொதுவாக, நமக்கு புறத்தில் அனைத்தையும் காண ஒரு விளக்கின் வெளிச்சம் தேவை அல்லவா?... அதுவே, சூரியனைக் காண விளக்கு தேவையா என்ன?

தேவையில்லை அல்லவா!.

அதுப்போலவே, நான் இருப்பதை எனக்கு அறிய இன்னொரு வெளிச்சம் தேவை இல்லை. எந்த இருளிலும் என்னை நான் அறிவேன். அதை நான் எவ்வாறு அறிகிறேன். **நான் எனும் உணர்வு** மூலமாக அறிகிறேன்.

ஆம்! அந்த உணர்வே அனைத்தையும் **அறியும் அறிவு.**

ஆக, நானே அந்த அறிவுச்சுடர், எனது பிரகாசமே **உணர்வு வெளி** என்று அறிவதைத்தான் '**தத்வமஸி**' என்பதாக சாஸ்திரம் உபதேசிக்கிறது.

ஆக, சூரியனின் பிரகாசத்தால்தான் எல்லாம் ஒளிர்வதுப் போன்று, அந்த பேருணர்வின் (பேரறிவின்) பிரகாசத்தால்தான் "**நான்**" அனைத்தையும் காண முடிகின்றது.

எனவே, உலகப் பொருட்களைக் காண்பதற்கு உதவுகின்ற சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் அனைத்தும் பிரகாசிப்பது என்னுடைய (பேருணர்வின்) அறிவுப் பிரகாசத்தால்தான் என்பதை என்னால் எளிதாக அறிய முடிகின்றது.

எனவே, ஆன்ம (அறிவு) ஒளியைக் காட்ட, புறத்திலுள்ள வெளிச்சங்களால் இயலாது.

அதாவது, **தீப ஒளி, சூரிய ஒளி, சந்திர ஒளி, நட்சத்திர ஒளி, கற்பூர ஒளி** போன்ற எந்த ஒளிகளாலும், என்னை எனக்குக் காட்டிக் கொடுக்க முடியாது.

ஆகவே, அந்த பேருணர்வே என்னை எனக்கு காட்டிக் கொடுக்கின்றது.
அதுவும் "**நான் இருக்கிறேன்**" என்று என்னை எனக்குக் காட்டுகிறது.

பொதுவாக ஒளி வழிபாடு என்றெல்லாம், நாம் அனுசரிக்கும் சாதாரணமான தீப ஒளியைப் போன்றது அல்ல **ஆன்ம ஒளி.**

தீப ஒளியைப் போன்று அந்த பேரொளியானது இருக்கும் என்றும், அதை நமது புருவ மத்தியிலே காண முடியும் என்றும் எண்ணிக் கொண்டு, ஏதேனும் பயிற்சிகளை செய்துக் கொண்டிருக்கிறோம்.

இதுவே, அறியாமை எனப்படுகிறது.

அதாவது, பெட்ரோமாக்ஸ் விளக்கிலிருந்து வருகின்ற ஒளி போன்றதல்ல இந்த ஆன்ம ஒளி. அல்லது அறிவுப் பிரகாசம் என்பது.

ஆகவே, அனைத்தையும் நாம் அறிந்துக் கொள்வது என்பது, "**நான் இருக்கிறேன்**" என்ற ஆன்ம ஒளி அறிவுப் பிரகாசத்தால்தான்.

இந்த ஒளி நாம் புறத்தில் காண்கின்ற சாதாரண ஒளி போன்றது அல்ல. **அதாவது, பௌதீக ஒளி அல்ல.**

அது ஒரு **உணர்வு வெளி அனுபவம்!**

அதாவது, **ஆன்ம அனுபூதி, இறையனுபூதி** என்பது ஓர் அனுபவம்.

**இது உணர வேண்டியது. உணர்ந்து அனுபவிக்க வேண்டியது.**

மற்ற புறக் காட்சிகள் போல அதனைக் காண முடியாது.

**அன்பு, இரக்கம், இன்பம்** போன்றவற்றை யாரும் காண முடியாது, அனுபவிக்கவே முடியும்.

அதுப்போன்று, **ஆன்ம (இறை) அனுபூதியையும்** அனுபவிக்க முடியுமே தவிர, காண முடியாது.

இதையே, கிருஷ்ணர் அர்ஜுனனிடம், உனது இந்த புறக் கண்ணினால் என்னைக் காண இயலாது. எனவே உனக்கு என்னுடைய (அறிவுக்கண்) தெய்வீகக் கண்ணைத் தருகிறேன் என்று கூறுகிறார். **(கீதை, 11.8).**

அந்த தெய்வீகக் கண் அல்லது **அறிவுக் கண்** என்பது "**ஆத்ம ஞானம்**" ஆகும்.

ஆம்! அந்த ஆத்ம ஞானத்தினால்தான், தன்னை அறிந்து **தன்மயமாதல்** என்பது நடைபெறும். தன்னை அறிவது என்பது **தன்னுணர்வை அறிவது**.

**நான் இருக்கிறேன்** என்று **விழிப்பு நிலையில்** தன்னை உணர்வது.

ஆம்! அந்த விழிப்பே, **பேருணர்வு.** அந்த பேருணர்வே **அறிவு.** அந்த அறிவே **பரமன்.**

அந்த பரமனின் இருப்பே **வெட்டவெளி** என்ற பராகாசம்.

அதுவே, **திருசிற்றம்பலம்**.

அதாவது, **திரு** (இறைவ(நா)ன்) **சிற்** (உணர்வு வெளி) **அம்பலம்** (ஆகாசம்).

**திருச்சிற்றம்பலம்.**



